31st July 1965]

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** பல ஜில்லாக்களில் ஒரே சப் கோர்ட்டுதான் இருக்கிறது. அதுவும் ஜில்லா கோர்ட்டுதான் இருக்கிறது. கன்னியாகுமரி சிறிய மாவட்டம். அங்கே அந்த ஊரில் இல்லாவிட்டாலும் நாகர்கோவிலில் நிச்சயமாக சப்கோர்ட் இருக்கிறது.

**திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை :** கல்குளம், விளவங்கோடு தாலுகாக்களுக்கு ஒரு சப்-கோர்ட் இருக்கிறது. இந்த கோர்ட்டை எடுக்காமல் இருந்தால் அங்குள்ள மக்களுக்கு எளிதாகவும் குறைந்த செலவிலும் நீதி கிடைக்க வாய்ப்பு கிடைக்குமென்று அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்பட்டதா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** ஜில்லாக்களில் ஜில்லா கோர்ட்டுடன்தான் சப்கோர்ட் இருக்கும். மேலும் இன்னொரு சப்கோர்ட் வந்து நிரந்தரமாக்கப்பட்டால் அங்கு வைப்பதைப்பற்றிக் கவனிக்கப்படும். ஒரே சப்கோர்ட் இருக்கிறதென்றால் அது ஜில்லா கோர்ட்டுடன் இருக்கும். அதேபோலத்தான் நாகர்கோவிலிலும் சப்கோர்ட் இருக்கிறது.

MR. CHAIRMAN : Questions are over.

**[*Note*.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## III.—ANNOUNCEMENT *RE*. MESSAGE FROM THE ASSEMBLY.

**MR. CHAIRMAN :** I have received a message from the Hon. Speaker Legislative Assembly, transmiting a copy of the Madras Hindu Religious and Charitable Endowments (Amendment) Bill, 1965 (L.A. Bill No. 17 of 1965), as passed by the Legislative Assembly and signed by him for the concurrence of the Council.

I have also received a message from the Hon. Speaker, Legislative Assembly, transmitting a copy of the motion as passed by the Assembly on the 30th July 1965 for the setting up of a Joint Select Committee of both the Houses, consisting of 18 members (12 members of the Legislative Assembly and 6 members of the Legislative Council) to consider the Madurai University Bill, 1965 (L.A. Bill No. 11 of 1965), and that the following members of the Legislative Assembly be selected to serve on such a Joint Select Committee :—

1. The Hon Sri M. Bhaktavatsalam.
2. Dr. B. Natarajan.
3. Sri A. P. C. Veerabahu.
4. Sri R. V. Swaminathan.
5. Sri V. Sankaran.
6. Sri P. K. Mookiah Thevar.
7. Sri R. Subramaniam.
8. Sri V. R. Nedunchezhiyan .

[Mr. Chairman] [31st July 1965

9. Sri Saw. Ganesan.
10. Sri S. Madhavan.
11. Sri M. Kalyanasundaram.
12. Sri P. Ramachandran.

## IV.—GOVERNMENT MOTION.

### MOTION UNDER RULE 23 (1) OF THE MADRAS LEGISLATIVE COUNCIL RULES.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"That rule 23 (1) of the Madras Legislative Council Rules be suspended and this House do resolve to transact Government Business on Saturday, July 31, 1965".

MR. CHAIRMAN : The question is—

"That rule 23 (1) of the Madras Legislative Council Rules be suspended and this House do resolve to transact Government Business on Saturday, July 31, 1965".

The motion was put and carried.

3-30 p.m.

## V.—GOVERNMENT RESOLUTION *RE.* INCREASE IN GUARANTEE FOR DEBENTURES ISSUED BY THE MADRAS CO-OPERATIVE CENTRAL LAND MORTGAGE BANK, LTD.

** கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :* கனம் தலைவர் அவர்களே, என் பெயரிலுள்ள பின்வரும் தீர்மானத்தை நான் பிரேரேபிக்கிறேன் :—

*"1964-ம் ஆண்டு தமிழ்நாடு கூட்டுறவு நில அடமான பாங்குகள் சட்டத்தின் 6-வது பிரிவைச் சேர்ந்த (2) உட்பிரிவின் கீழ், மாநில அரசாங்கம், தமிழ்நாடு கூட்டுறவு மத்திய நில அடமான பாங்க் லிமிடெட் வழங்கும் கடன் பத்திரங்கள் சம்பந்தமாகத் நாம் வழங்குகிற அதிக அளவு உத்திரவாதத் தொகையை ரூ. 30 கோடி (முப்பது கோடி ரூபாய் மட்டும்) மொத்த மதிப்பு வரையில் அதிகரிக்கலாம் என்று மாநில அரசாங்கத்திற்கு இச்சபை பரிந்துரைக்கின்றது. பாங்க் அவ்வப்போது மீட்கிற கடன் பத்திரங்கள் இதில் அடங்காது. அத்தகைய கடன் பத்திரங்கள் அவை வழங்கப்பட்ட தேதியிலிருந்து 25 ஆண்டுகளுக்கு மேற்பட்ட கால அளவிற்காக வழங்கப்படக் கூடாது. மேலும், கடன் பத்திரங்கள் வெளியிடப்படும் ஒவ்வொரு சமயத்திலும் அதற்குரிய வட்டி வீதம் இந்திய ரிசர்வ் பாங்க் அங்கீகரிக்கும் வட்டி வீதத்திற்கு மேற்படக் கூடாது".*

MR. CHAIRMAN : The question is—

"This Council recommends to the State Government that they may, under sub-section (2) of section 6 of the Madras Co-operative Land Mortgage Banks Act, 1934, increase the maximum amount of the guarantee given by them in respect of the debentures issued by the Madras Co-operative Central Land Mortgage Bank, Limited, up to a total face value of Rs. 30 crores (Rupees thirty